ஸ்ரீ க. சுப்பிரமணிய ஐயர்,
B A

அவர்களின்

அன்பளிப்பு



ஸ்ரீ

கம்பராமாயண சுந்தரகாண்டத்தின்
உருக்காட்டுபடலச் செய்யுள்களின்
உள்ளுறையுரையான

# திருமந்த்ரப்ரதானம்.

இது

மதுரை வக்கீல்,
எம். எஸ். சேஷையங்காரால்
எழுதப்பெற்று

மதுரைத் தமிழ்ச்சங்கமுத்திராசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

ஸ்ரீ

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ்ப் பத்திராதிபர்
திரு. நாராயணையங்காரியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

நிலைமண்டிலவாசிரியப்பா.

உலகியல் வழக்கு முள்ளுறைப் பொருளு
மிலகிய காவிய மெவற்றினு மேற்றம்
பெற்றவான் மீகம் பெரிதுந் தழுவிய
சொற்றொடர் கம்ப சூத்திரத் தொகுதியுட்
சுந்தர காண்டஞ் சுடர்க்கணை யாழி
தந்தனை யழகுறச் சாற்றிய காதையின்
ஆரியன் சீடனுக் கருமறை யுரைத்தவச்
சீரிய வுட்பொருள் தெள்ளிதிற் றெரிந்து
விரித்துரை யெழுதி விளங்குற வச்சிற்
பொறித்துல குண்ணப் புதுவிருந் தளித்தான்
மறையெனுந் தென்கலை வடகலை யிரண்டின்
குறையறு முடிவுங் குருமுக முணர்ந்தோன்
வாக்கியல் *நியாய வாதி†சே ஷாக்கியன்;
ஆக்கிய ‡வியாக்கியை யருமைமிக் கதுவே.

---

* நியாயவாதி - வக்கீல்.

† சேஷாக்கியன் - சேஷனென்னு நாமதேயமுடையோன்.

‡ வியாக்கியை - வியாக்கியானம்.

மதுரை மாணவர்செந்தமிழ்ச்சங்கத்தின்
அக்ராஸநாதிபதியும், மதுரைக்காலேஜ்
தமிழ்ப்பண்டிதரும் ஆகிய

ம. கோபாலகிருஷ்ணையர் இயற்றியது.

;க்காட்டுந் தமிழ்க்கம்ப ராமாயணக்கதையுள்
மருவி ஓங்கும்
ருக்காட்டு படல"த்தின் உபதேசப் பொருளையெலாம்
உலகோர் யாரும்
க்காட்டும் கன்மவினை கடிந்தொதுக்கக் கனிந்துரைத்
கற்றோர் போற்றும் [தான்
நக்காட்டு நீதிவலான் சேடனெனில், அ'தன்பெருமை
செப்பற் பாற்றோ?

---

# முகவுரை.

தவசிரேஷ்டரான வான்மீகிமுனிவர் அருளிய இராமாயணம், வைதிகமார்க்கம்பரவிய நாடுகளிலெல்லாம், ஒப்புயர்வற்றகாவியமாகவும், சிறந்த பாராயணகிரந்தமாகவும், இம்மை மறுமைப்பயனளிக்கும் விசேஷமுடையதாகவும், வேதியர்களால் நித்தியமாக ஜபிக்கப்பெற்ற காயத்திரீமஹாமந்திரத்தின் தாத்பரியகெர்ப்பமான இதிஹாஸமாகவும் யாவராலும் பாராட்டப்படுவதுடன், மோக்ஷோபாயமான பிரபத்திதர்மத்தை உலகத்தாருக்கு அறிவிக்கும் நூலாகவும் ஸ்ரீவைஷ்ணவர்களால் கொண்டாடப்பெறும் என்பது யாரும் நன்கறிந்ததே. அத்தகைய வான்மீகத்தைத்தழுவிய கம்பராமாயணச்செய்யுள்களும் அவ்விதமான கருத்தமைதிகொண்டிருக்கவேண்டுமென்பது,

"செவ்வியமதுரஞ்சேர்ந்தநற்பொருளிற் சீரியகூரிய
சொல் வெளவியகவி." என்றும்,

யினுக்கணியாய்ஆன்றபொருள்தந்துபுலத்திற்குகி
யகத்துறைகள்தாங்கியைந்திணைநெறியளாவிச்
புறத்தெளிர்ந்துதண்ணெனன்ஒழுக்கமுந்தழுவிச்சான்
ர் கவியெனக்கிடந்த......"என்றும்,

பர்கூறும் உத்தமகவிலக்ஷணங்களைக் கவனிக்கு
த்தும்,

றந்தலைநிறுத்திவேதம்அருள்சுரந்தறைந்தநீதித்
ங்தெரிந்துலகம்பூணச்செந்நெறிசெலுத்தித்தீயோர்
ரந்துகறுறித்தக்கோரிடர்துடைத்தேகவீண்டுப்
ந்தனன்றன்பொற்பாதமேத்துவார்பிறப்பறுப்பான்"

ன்று இராமாவதாரத்து ரஹஸ்யத்தை வெளி
ட்டதைச் சற்று நோக்குமிடத்தும், கம்பர்
ச்சக்ரவர்த்தியென்பதை நினைக்குமிடத்தும்
படும்.

எம்பெருமான் சர்வசக்தன் என்பதைப் பால
ண்டத்திலும், பக்தரக்ஷண தீக்ஷிதன் என்பதை
யோத்யாகாண்டத்திலும், பாகவத பரதந்திரன்

என்பதை ஆரண்யகாண்டத்திலும், சரணாகதிதர்மம் அபயப்பிரதானவைபவ மிவற்றை யுத்தகாண்டத்திலும், ஏனையதர்மங்களை மற்றஇடங்களிலும் கம்பர் வெளியிட்டிருப்பதைப் பரக்கப்பார்க்கலாம்.

கிஷ்கிந்தாகாண்டத்தில் அநுமப்படலத்துள், "மாற்றமஃதுரைத்தலோடும்" "இல்லாதவுலகத்தெங்கும்", என்னும் செய்யுள்களாலும் "அஞ்சனைக்கொருசிறுவன்" என்று தொடங்கி, "துன்பினைத்துடைத்துமாயத்தொல்வினை" என்னுமளவான செய்யுள்களாலும் சொல்லப்பட்ட ஆசார்யலக்ஷணமான சாஸ்திரார்த்த தத்துவஞானமும், சதாசாரசீலமும் பரத்வநிச்சயமு முடையனாய், இயல்பாகவே பராநுகூலபரனும் ஸ்வப்ரயோஜனத்தில் விருப்பமில்லாதவனுமாயிருப்பானொருவன், "மஞ்செனத்திரண்டகோலமேனிய"என எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்தவாறே அவனனுக்கிரகத்தால் லோகத்தாரை உஜ்ஜீவிக்கச்செய்யும் சதாசாரியனாவனென்பது "மாணியாம்படிவமன்று" என்னுஞ்செய்யுளாற் குறிக்கப்பட்டிருக்கிறது.

இப்படியான சதாசார்யனைச் சிஷ்யயாத்திரை யிற் பிரவிர்த்திப்பித்து, சம்சாரதுக்கத்திலகப் பட்டுழலுமவரை உடைமையென்னும் மமகார நிவிர்த்திகண் டுஜ்ஜீவிப்பிக்கும்படி எம்பெருமான் றிருவுள்ளம்பற்றுவன் என்பதை, "அணிகலக்குறி யினாலே, வென்றியானடியன்றன்னை வேறுகொ ண்டிருந்து கூறித், தென்றிசைச்சேறியென்றானவ னருள்சிதைவதாமோ" என்னும் சுந்தரகாண்டச் செய்யுளாலும் தெளியலாம்.

இராமாவதார ரஹஸ்யத்தை ஹநுமான் வாக்கால், இராவணனுக்கு அறிவுறுத்தியிருப்ப தையும்,

"அன்னவர்க்கடிமைசெய்வேன்நாமமுமனுமனென்பேன்"

என்று ஹநுமான்வாக்கால்காட்டும் ஆண்டானடி மைத்திறனையும் கருதுமிடத்து, ஹநுமானை ஈசன ருள்பெற்று உலகத்தார்க்கு உறுதிபயக்கும் உண் மைப்பொருளை உபதேசிக்கும் நல்லாசிரியனாகவும், பரமபதியின்பிரிவாற்றாமல் துன்புறும் சீதைக்குப்

பதியின் அருட்டுன்னத்தைக்காட்டி, துயர்நீக்கி, பதியையடைய ஹேதுவாயிருந்த திருவாழியை, சேதனர்கள் சம்சாரத்துக்கத்தினின்று கரையேறி எம்பெருமானையடைய ப்ரதானஹேதுவான திருமந்திர மாகவும் உய்த்துணரவைத்துக்கூப்பார் சுந்தரகாண்டத்தில் ஆசார்யதர்மத்தையும் திருமந்திரமேம் பாட்டையும் வெளியிட்டிருப்பது நன்கு தெளியத் தக்கது.

இவ்வரிய உண்மைகள், கல்வி கேள்விகளிற் சிறந்தபெரியோர்பாற் பொருள்கேட்பவர்கட்குத் தெளிவாய்விளங்குவனவேயன்றி, சாமானியமாய்க் கம்பராமாயணம்படிப்போர்க்கெல்லாம் விரிவாய்த் தெரிதல் பெரிதும் அரிது. சுந்தரகாடத்துள் இந் நுண்ணியகருத்துக்களடங்கிய உருக்காட்டுபடலத் தில் 10 செய்யுள்களுக்கு என் நண்பர் சேஷையங் காரவர்கள், உள்ளுறையை விரித்து உரைசெய் திருப்பது யாவருக்கும் பயன்படுமென்பதற் கைய மில்லை. மேலும், தமிழ் ஆதரவின்றி நிலைதளர்ந்

திருக்கும் இக்காலத்தில், ஆங்கிலம் கற்று, லௌகிகவிருத்தியில், இடையறாதமுயற்சியிலிருக்கும், இவர்களுக்குள்ள மிகுதியான வேலைகளுக்கிடையில் தமக்குக்கிடைக்கும் சொற்ப அவகாசத்தில், மிக்க ஆராய்ச்சிசெய்து, ஆழ்ந்த கருத்தை எளிதில் யாவருக்கும் புலப்படுமாறு தெளிவான இனியநடையில் எழுதியிருப்பது, தமிழ்ச்சுவையறியும் அவாமிக்கார்க்கெல்லாம் ஆனந்தத்தை விளைவிக்கத்தக்கதே.

இன்னும் இராமாயணத்தில் இதரபாகங்களில், இதுபோற் காட்டத்தக்க விசேஷார்த்தங்களையும், இவ்வாறு விரித்து எடுத்துக்காட்டி, வெவ்வேறு பலநூல்களியற்றித் தமிழுலகத்திற்கு மகிழ்வூட்டுமாறு விரும்புகின்றேன்.

மதுரை,
13—12—15.

டி. ஸி. ஸ்ரீநிவாஸையங்கார்,
காரியதரிசி,
மதுரைத் தமிழ்ச்சங்கம்.

ஸ்ரீ

# முன்னுரை.

ஸ்ரீ வால்மீகராமாயணசுந்தரகாண்டத்தின் ஆரம்பத்திலெடுத்துக்கொண்ட ஸ்வாபதேசார்த்தமான சேதனனுடையநிலை ஆசார்யகிருத்தியமென்னு மிரண்டுவிஷயங்களுக்குமிணங்கவே கம்பராமாயணசுந்தரகாண்டத்துள்ளும் உருக்காட்டுபடலம் அறுபத்துமூன்றாவது "மீட்டுமுரை"யென்ற செய்யுண்முதல் எழுபத்திரண்டாவது "பாழியபணைத்தோள்" என்றசெய்யுளீறாகப் பத்துப்பாசுரங்களிலும் உள்ளுறைப்பொருள்தோன்றினமையா லவற்றை யென்சிற்றறிவிற்கெட்டியமட்டில் ஒருவாறெழுதிச் செந்தமிழில் வெளியிட்டேன். அதனைக் கண்ணுற்ற சின நண்பர்கள் புத்தகரூபமாகப் பதிப்பிக்கவேண்டுமென்றுவிரும்பியதற்கிணங்கி யிது பதிப்பிக்கப் பெற்றிருக்கிறது.

இந்தவிஷயத்தில் இன்னும் பொருத்தமாயும் நுட்பமாயுமுள்ளபொருள்களைப் பண்டிதர்

பலரும் ஆராய்ச்சிசெய்து விரித்து வெளியிட வேண்டுமென்பதும், இவைபோல் வேதாந்ததாத் பரியங்களை யுள்ளடக்கிக்கொண்டு, ஆங்காங்குத் தோன்றுஞ் செய்யுட்களையும் பண்டிதர்கள் ஆராய்ச்சிசெய்து அவற்றின் உட்பொருளை வெளி யிடவேண்டுமென்பதும் எனது வேண்டுகோள்.

மதுரைத் தமிழ்ச்சங்க ஸ்தாபகராயும் எனக்கு நண்பராயுமிருந்த ஸ்ரீமான் பாண்டித் துரையவர்களுடன் பழகுங்காலங்களிற் கம்ப ராமாயணச்செய்யுள்களுக்கு அவர்கள்சொல்லும் அருமையானபொருள்களைக் கேட்டதிலிருந்தே கம்பராமாயணத்தை ஊக்கத்துடன் படித்து ஸாரார்த்தங்களைக் கிரஹிக்கவேண்டுமென்ற அவாவும் முயற்சியு மெனக் குண்டானமைபற்றி அவர்களின்ஞாபகார்த்தமாகவே இதனையவர் களுக் குரிமைசெய்திருக்கிறேன்.

இங்ஙனம்,

எம். எஸ். சேஷையங்கார்.



ஸ்ரீ:

# திருமந்த்ரப்ரதானம்.

ஸ்ரீ வால்மீகிபகவானால் வேதசாரங்கள் நன்குவிளங்கும்படி செய்தருளப்பெற்ற ஸ்ரீமத்ராமாயணத்திலடங்கிய ஏழுகாண்டங்களிற் சிறந்தது சுந்தரகாண்டமெனப்பெயர்பெற்றதொன்று. அக்காண்டம் இப்பெயர்வகித்ததற்கு அநேககாரணங்கள்கூறுவாருளர். அவைகளில் அதிகப்பொருத்தமுடையதும் மிகவும் சுலபமானதும் விசேஷமானதுமொன்றுண்டு. அதாவது: இக்காண்டத்தில் ஜீவாத்மாவினுடையஸ்வரூபத்தையும், ஆசாரியக்ருத்தியத்தையும் மிகத் தெளிவாயும் அழகாயும் ஸித்தாந்தஞ்செய்திருப்பதால், சுந்தரகாண்டமெனப் பெயர்கிடைத்ததென்பதேயாம். அதற்கனு

ருணமாகவே ஸ்ரீமத்வால்மீகராமாயணத்திற் சுந்தரகாண்டத்திற் பலவிடங்களிலும் விசேஷார்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது. முதல்ஸ்லோகமாகிய,

𑌤𑌤𑍋𑌰𑌾𑌵𑌣𑌨𑍀𑌤𑌾𑌯𑌾
𑌸𑍀𑌤𑌾𑌯𑌾𑌶𑍍𑌶𑌤𑍍𑌰𑍁𑌕𑌰𑍍𑌶𑌨𑌃
𑌇𑌯𑍇𑌷𑌪𑌦𑌮𑌨𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑍁𑌂
𑌚𑌾𑌰𑌣𑌾𑌚𑌰𑌿𑌤𑍇𑌪𑌥𑌿

என்பதற்கு, சாதாரணமாக 'மேலே கிஷ்கிந்தாகாண்டத்திற்கண்டபடி நிகழ்ந்தபிறகு, சத்துருவை நாசம்பண்ணத்தகுந்த ஹநுமான் இராவணனாற் பெயர்த்துக்கொண்டுபோகப்பட்ட சீதையினுடைய இருப்பிடத்தைத் தேடுவதற்காக ஆகாயமார்க்கத்திற் பிரவேசிக்க எண்ணங்கொண்டார்' என்று பொழிப்புரை அமையும்.

ஆனாலும், முன்கூறியபடி ஜீவாத்மசொரூபஸித்தாந்தபரமாகப் பெரியோர்களால் அதேஸ்லோ

கத்துக்குப் பின்வருமாறு விசேஷார்த்தம் சொல்லப்படுகிறது. அதாவது: சேதனர்களை உய்யக் கொள்வதற்காகவே ஏற்படுத்தியமுத்திரையையும் ஆக்ஞையையும் பெற்றபிற்பாடு அக்ஞானமான பகைவனை வேரோடுவெல்லத்தக்க ஆசாரியன், (ஹநுமான்) பூர்வாசாரியர்களாலநுஷ்டிக்கப்பட்ட ஸத்ஸம்பிரதாயமார்க்கத்தில் நிலைத்தவராய், அவிவேகத்தால் தனக்கு ஸ்வாதீனம்பண்ணப்பட்ட சேதனனுடையஸம்ஸாரமண்டலத்தையும்,பகவத்ப்ராப்தியிலுண்டான எண்ணத்தையும், ஸாத்விக ஸம்பாஷணைமுதலான அடையாளத்தையுந் தேடநின்றார் என்பதாம். மேற்கண்டவிதமாய்ஆரம்பஸ்லோகமே இந்த விசேஷார்த்தத்தையடக்கிக் கொண்டிருக்குமாயின், பின் வால்மீகசுந்தரகாண்டத்தில் அநேக இடங்களில் இதையநுசரித்தே சேதனனுடையநிலை,ஆசாரியதருமமிவ்விரண்டும் விரித்துச்சொல்லப்பட்டிருக்கின்றனவென்றுபெரியோர்கள்சொல்வது வியக்கத்தக்கதன்று.

ஆனால், கம்பராமாயணத்தனியன்களிலொன் றிற் பின்வருமாறு காண்கிறோம்.

கழுந்தராயுனகழல்பணியாதவர்கதிர்மணிமுடிமீதே
அழுந்தவாளிகள்தொடுசிலைராகவைவபிநவைகவிநாதன்
விழுந்தநாயிறதெழுவதன்முன்மறைவேதியருடனாய்ந்
தெழுந்தநாயிறுவிழுவதன்முன்கவிபாடினதெழுநூறே.'

இதனுள் 'மறைவேதியருடனாய்ந்து' என் பதனாலேயே, கீர்வாணராமாயணத்தின்ஸாரத் தைப் பிராம்மணோத்தமர்களுடன் தெரிந்தெடுத் தாரென்பது நன்குவிளங்கும். தவிரவும்,

“தேவபாடையினிக்கதைசெய்தவர்
மூவரானவர்தம்முளுமுந்திய
நாவினாருரையின்படிநான்றமிழ்ப்
பாவினாலிதுணர்த்தியபண்பரோ”.

என்பதனுள் வால்மீகி, வசிஷ்டர், போதாயனர் இந்த மூன்றுமுனிவர்களுள்ளும் முதன்மையுள்ள வால்மீகிமுனிவரது சொற்களுக்கிணங்க (அல்லது

இம்மூவர் க்ருதிகளிலும், ஆங்காங்குள்ள முக்கியமான க்ருதிகளையே தலைமேற்கொண்டு) இக்காவியத்தைச்செய்தருளினதாகக் கம்பரே வெளியிட்டிருக்கின்றனர். ஆதலால், கம்பநாட்டாழ்வார் ஸ்ரீமத்ராமாயணத்தை, "....தமிழிலே தாலைநாட்டி ...பார்மேல், நம்புபாமாலையாலேநரருக்கின்றமுதமீந்தான்" என்பதற்கிணங்கச் செய்தருளினரென்பதற்கு ஐயமில்லை. அப்படியாயின் வால்மீகராமாயண சுந்தரகாண்டத்தில் மேற்குறித்தபடி ஜீவாத்மாவின்சொரூபம் ஆசாரியதருமம் இவைகள் விளங்கப்பெறின், கம்பராமாயணசுந்தரகாண்டத்திலும், சிலசெய்யுள்களிலாவது இந்தத்தத்வார்த்தங்கள் தெய்வப்புலவராகிய கம்பரால் அடக்கப்பட்டிருக்கவேண்டுமென்ற உறுதியானநம்பிக்கையுடன் ஆராய்ந்துபார்த்ததிற் பின் எடுத்தெழுதப்பெறும் சிலபாட்டுக்களில் விசேஷார்த்தங்கள் காணப்படுதலால் அவைகளை விரித்தெழுதத்துணிந்தேன்.

சுந்தரகாண்டம் உருக்காட்டுபடலம். பாட்டு-63.

மீட்டுமுரைவேண்டுவனவில்லையெனமெய்ப்பேர்
தீட்டியதுதீட்டரியசெய்கையதுசெவ்வே
நீட்டிதெனநேர்ந்தனனெனுநெடியகையாற்
காட்டினனெனாழியதுவாணுதலிகண்டாள்.

(இ - ள்) மீட்டு முரை - முன்னமே, பகவானுடையசொரூபத்தையும், சௌலப்பியத்தையும் காருண்யத்தையும், சேதனனுக்கும் பகவானுக்குமுள்ளசம்பந்தத்தையும், சேதனனுடையபூர்வவாசனையையும், ஆசாரியன் (ஹநுமான்) எடுத்துச் சொன்னபின் மற்றும்சொல்லவேண்டியவிஷயம். வேண்டுவனவில்லை—இனிமேல், சேதனனால்கேட்கப்பெறுவதும், ஆத்மா உஜ்ஜீவிக்கும்பொருட்டுள்ள அவசியமானதுமான உபாயம் வேறுயாதொன்றுமில்லை. என—என்று, (இவ்விதமாகச் சொல்லி.) மெய்ப்பேர்தீட்டியது—நாராயண என்னும் பெயரும் உயிருமான திருநாமத்துடன் ஓம் நமோ என்ற உடலாகிய (மெய்யாகிய) எழுத்துக்களைச்சேர்த்துச்செய்த திவ்யமங்களகரமான அஷ்

டாக்ஷரம் என்ற திருமந்திரமொன்றுண்டு. தீட்டரியசெய்கையது—அந்தத்திருமந்திரமானது எழுத வரிது, எழுதற்பாலதன்று, எழுதாக்கிளவி,(வேத வாக்கியம்) அதை எழுதமுடியாது, எழுதுதற் கடங்காது, எழுதிக்கற்றுக்கொள்வதிற்பயனில்லை, அது உபதேசமந்திரம், உபதேசக்கிரமத்தாலடையத்தக்கதேயொழிய வேறல்ல. (ஆகையால்)செவ்வே—நேராக (முறைப்படி) அதாவது குருபரம் பராபூர்வமாக, அல்லது உபதேசவிதிப்படி. நீட்டு தென—நீ சேதனனுககு இந்த அஷ்டாக்ஷரமந்திரத்தை உபதேசம்பண்ணு என்றுசொல்லி. நேர்ந்தனன்—எனக்குப் பகவான்கொடுத்தார், அதாவது ஆஞ்ஞாபித்தார். என—என்று உபதேசம் பண்ணக்கருதி. செடியகையால்— விசேஷ அர்த்த புஷ்டியுள்ளதும், 'ஞானவித்தகந்தரித்தசெங்கை' என்பதற்கிணங்க ஞானக்குறியுமாகய சின்முத்திரையினால். காட்டினனொராழி—தனது திருக்கையை வட்டவடிவாய்ச் சின்முத்திராரூபமாகவைத்துக்கொண்டு, பகவதாக்ஞாரூபமானவேதவாக்கிய

மாயும், மிகவும் ஆழ்ந்தபொருள்களையுடையதாயு மிருப்பதால் ஆழியென்றுசொல்லத்தக்கதாயுள்ள திருவஷ்டாக்ஷரமந்திரத்தை, அநுமானாகியவாசாரி யன் சீதையாகியசேதனனுக்குபதேசித்தார். அது வானுதலிகண்டாள்—சேதனனும் உபதேசம் பெற்றபின் அந்தத்திருமந்திரத்தின்பெருமையை அறிந்தான். அதனுலகமகிழ்ந்தான். அகத்தி னழகு முகத்தில்தெரியுமாதலால் ஆத்மாவடைந்த ஆனந்தத்தை வெளிப்படுத்திக்காட்டி யமுகமலர்ச் சிகொண்டு, வாணுதலிகண்டாள் எனக்கூறப்பட்டது. இன்னும், திருமந்திரோபதேசத்துக்குரிய வைஷ்ணவசின்னமான ஊர்த்துவபுண்டரமணிந்த நெற்றியும் பகவத்பாரதந்திரியமுமுடைய சேதன னென்பது தோன்ற வாணுதலியென்றொன்பதும் பொருந்தும்.

எனவே, அநுமான் சீதைக்கு ஸ்ரீராமனது கணையாழியைக்கொடுத்தார் என்பது இச்செய்யுளுக்குச் சாமானியக்கருத்தாயிருப்பினும், விசே

ஷார்த்தமாக, அநுமானாகிய ஆசாரியன் ராக்ஷஸ மண்டலமாகிற சம்ஸாரபந்தத்தால் நலிவடையா நின்ற ஸீதையாகியசேதனனுக்குத் திருவாழியாகிய திருவஷ்டாக்ஷரத்தை வேதவிதிப்படி. பிரஸாதித்தார் என்பதையும் இச்செய்யுள் அடக்கிக் கொண்டிருக்கிறது.

சுந்தரகாண்டம், உருக்காட்டுபடலம்-செய்-64.

இறந்தனர்பிறந்தபயனெய்தினர்கொலென்கோ
மறந்தனரறிந்துணர்வுவந்தனர்கொலென்கோ
துறந்தவுயிர்வந்திடைதொடர்ந்ததுகொலென்கோ
திறந்தெரிவதென்னைகொலிநன்னுதல்செய்கை.

"அதுவாணுதலிகண்டாள்" என்று சொன்னபின் அந்தச்சேதனனுக்குண்டான பரவசத்தைவெளிப்படுத்தவிரும்பிப் பின்வரும் இரண்டுசெய்யுள்களின்மூலம் பலவிததிருஷ்டாந் தங்களுடன் உபபாதிக்கிறார்.

(இதுவும் உபதேசாநந்தரம்.) இந்நன்னுதலி செய்கை-இந்தத்திவ்விய முகமலர்ச்சியையுடைய சேதனனுக்கு ஜாயமானகடாக்ஷத்தாலுண்டான ஆனந்தாநுபவத்தை; (எவ்வனுபவத்துக்கீடாகச் சொல்லுதல் கூடுமென்று ஆராய்ந்தால்) இறந்தனர் - ஜீவாத்மா சம்சாரபந்தத்திலகப்பட்டு இந்திரியங்களாற்கட்டுண்டு பூர்வஞானமே மேலிடாது அஞ்ஞானமான அந்தகாரத்திலகப்பட்டுழன்று ஜென்மமெடுத்தும் ஜென்மசாபல்யமானகிருத்தியங்கள் யாதொன்றுஞ்செய்யாமல், திருவடிகளை அடையவேண்டியகருமங்களிருந்தும்விலகி ஜீவப்பிரேதம்போலிருக்கும் பயனற்ற ஆத்மகோடிகள்; பிறந்தபயனெய்தினர் கொலென்கோ - திடீரென்று பகவத்ஜாயமான கடாக்ஷவிசேஷத்தாலே உலகிற்பிறந்து அடைய வேண்டிய புருஷார்த்தங்களை அடைந்தால் அந்த ஜீவர்களுக்கு எவ்வளவு ஆனந்தமுண்டாகுமோ அவ்வளவுசந்தோஷம் உண்டாயிற்றென்று சொல்லலாமோ; (அல்லது) அறிந்து - சத்சம்பிரதாய

மார்க்கத்தை யனுஷ்டித்துவந்து, பகவத்சரணா
விந்தங்களில் பெட்டிருந்துவந்து; (இப்பால்)
மறந்தனர் - ஜென்மாந்தரவாசனையையும், பகவா
னுடைய சரணாரவிந்தங்களின்வைபவத்தையும்
ஒருகாலவிசேஷத்தில் மாயையினால் அடியோடு
மறந்திருந்த ஒருஜீவன்; உணர்வுவந்தனர்கொ
லென்கோ - மறுபடியும் குருமுகமாகப் பூர்
வாநுஷ்டானத்தையும் தன்னிலைமையையும் இடை
ரென்றறிந்து உஜ்ஜீவிக்கும்படியான ஒருஞானது
நேர்ந்தால் அப்போது என்ன குதூகல முண்டா
குமோ அதற்குச்சமமாகச்சொல்லலாமோ;
(அல்லது) துறந்த உயிர்-போன பிராணன்; வந்து
இடைதொடர்ந்துகொலென்கோ - மறுபடியும்
உடலுட்புகுந்து உடலும் உயிரும் கூடிற்றென்
றால் எவ்வளவு ஆனந்தமுண்டோ அவ்வளவு
ஆனந்தத்தை இந்தச்சேதனன் அடைந்தா
னென்றுதான்சொல்லலாமோ, (செய்கை)
திறந்தெரிவதுஎன்னை கொல் - அந்த

ஆத்மானந்தத்தின் அளவையும் பெருமையையும் வன்மையையும் என்னவென்றெடுத்துரைப்பது.

சுந்தரகாண்டம், உருக்காட்டுபடலம். செய்-65.

இழந்தமணிபுற்றரவெதிர்ந்ததெனலானள்
பழந்தனமிழந்தனபடைத்தவரையொத்தாள்
குழந்தையையுயிர்த்தமலடிக்குவமைகொண்டாள்
உழந்துவிழிபெற்றதொருயிர்ப்பொறையுமொத்தாள்.

(தவிரவும்,) புற்றரவு - இந்தச் சம்சாரமண்டலத்தில் ஜீவாத்மா; இழந்தமணி - (தான் அயர்வுற்றிருந்தபோது, அதாவது தான் மாயையினல் மயக்குற்று மெய்ம்மறந்து புத்திஸ்திரமில்லாமற் சஞ்சலமடைந்திருந்தகாலத்தில்) தன்னைவிட்டகன்ற உயர்ந்த ரத்னசமானமான அழுக்கற்ற நல்லறிவை; எதிர்ந்ததெனலானள் - மறுபடியும் அடைந்தால், அந்தச்சேதனனுக்கு அப்போதுண்டாகும் களிப்பை ஒக்கும்; (அல்லது) இழந்தன தானே தன்னுடைய கர்மானுஷ்டானங்களின

லும், அவிவேகத்தினுலும், சுயேச்சையினுலான கிருத்தியங்களினுலும் இழந்தமோக்ஷத்தை; பழந் தனம் - மிகப்பழமையாயும் அநாதிபூர்வகமாயும் அநாதிகாலங்களாகத் தன்னைக்காப்பாற்றுவதற்கு ஹேதுவாயுமுள்ள ஒருசாதமான மூலமந்திரமானதும், பூமியிலுள்ள மனோரதங்களையும் சுவர்க்க போகங்களையும் முக்தியையும் சாதித்துக்கொள்வதற்கு ஆதாரமானதுமான ஒப்பற்றபொருளை; படைத்தவரை யொத்தாள் - மீண்டும் புதையல் கண்டெடுத்தாற்போல் அதிகவியப்புடன் புதிதாகக் கட்டினதுபோலடைந்தால் அப்போது சேதனனுக் குண்டாகும் ஆனந்தத்திற்கு ஒப்பாகுமென்று சொல்லற்பாலதாம்; (அல்லது) குழந்தையை - தென்புலத்தாரைத் தான் பருவகாலங்களிற்கொடுக்கும்தண்ணீர்முதலாயுள்ள கருமங்கள் யாவும் வேதவிதிப்படிசெய்வதாற் கரையேற்றுந் தன்மையுடைய ஆண்குழந்தையை; (இனி உள்ளுறை) ஜீவாத்மா எத்தனையோகோடி ஜென்மமெடுத்துழலும்போது "பூதமைந்தும், விலங்கிய

விகாரப்பாட்டின்வேறுபாடுற்றவீக்கம், கலங்கு வது'' என்பதற்கிணங்க அந்தவீக்கமாகிய பிறப் பின் மிகுதியற்று மறுபிறப்பில்லாமல் உய்யும்ப டிக்கான ஓர் உபாயத்தை; (திவ்விய அஷ்டாக்ஷர மந்திர அனுக்கிரகத்தை) உயிர்த்த - நூதனமாக எதிர்பாராது அடைந்த; மலடிக்குவமைகொண் டாள் - நெடுநாளாகக்காத்திருந்தும் பிரயத்னப் பட்டும்கிட்டாமல் இனிக்கிடைப்பதரிதென்று மனங்கலங்கிச்சோர்வும்ஏக்கமுமுற்றிருக்கும்ஒரு ஜீவாத்மாவுக்கு அப்போதுண்டாகும் பரவசத்தை நிகர்க்குமென்றுசொல்லலாம்; (அல்லது) உழந்து- அஞ்ஞானமிகுதியால் தன்னுடைய ஞானக்கண் ணடைக்கப்பட்டு அதனால்,தெளிவானநடையற்று நன்னெறிவிட்டுவிலகி உழல்கின்றபோது; விழி பெற்றது -சன்மார்க்கமும் மோக்ஷஹேதுவுமான நன்னெறியை ஊட்டும் படிக்குள்ள ஓர் உபா யத்தையடைந்த; ஓர் உயிர்ப்பொறையும் ஒத்தாள்- ஒருஜீவாத்மா அல்லது ஒருசேதனனுக்குள்ளது போல் ஆயிற்று.

ஆகவே, இந்த இரண்டுசெய்யுள்களாலும் அனுமான் சீதாபிராட்டிக்குக் கணையாழியைக் காட்டினவுடன் அவள் மிகக்களிப்புற்றுளென்பது சாமான்யக்கருத்தாயினும் விசேஷார்த்தமாகத் திருவஷ்டாக்ஷரவுபதேச பூர்வமாகச் சேதனனுக் குண்டாகும் ஆத்மானந்தவைபவத்தைப் பூர்வாசாரியர்களாற் பலவிததிருஷ்டாந்தங்களுடன் விரித்தெழுதப்பெற்றதற்கிணங்க இவ்விடத்திலும் கூறப்பட்டது.

இனிப் பின்வரும் இரண்டுசெய்யுள்களால், திரு மூலமந்திரத்தை உபதேசம்பெற்றபின் அந்தச்சேதனன் அதைக்கொண்டாடி யனுபவித்த விதத்தை விரித்துக்காட்டுகிறார்.

சுந்தரகாண்டம் உருக்காட்டுபடலம் செய்.-66.

வாங்கினண்மூலக்குவையில்வைத்தனள்சிரத்தால்
தாங்கினண்மலர்க்கண்மிசையொத்தினடடங்தோள்
வீங்கினண்மெலிந்தனள்குளிர்ந்தனள்வெதுப்போ
டேங்கினளுயிர்த்தனளிதின்னதெனலாமே.

இ - ள். வாங்கினள்—சேதனன் அஷ்டா க்ஷரமந்திரத்தை "மூலமிதை" என்று வான்மீகி பகவான் பிரயோகித்ததற்கிணங்க மனசில்வாங் கினன் என்றார்; மனசில் நிலைபெறச்செய்தான் என்றபடி. முலைக்குலைவயில்வைத்தனள் - பகவத நுபவ முக்கியசாதனமான சேஷத்வபாரதந்தர்ய ஸ்வரூப ஜ்ஞானத்தைப்பிறப்பிக்கும் த்வயம் என் னும் மந்த்ரத்துடன்சேர்த்து அந்தமந்திரத்தை அநுசந்தித்தான். சிரத்தால்தாங்கினள் - அந்தத் வயார்த்தத்துக்குள் உத்தரவாக்யார்த்தத்தி னன்றினன்; அதாவது சர்வசிலாக்கியமானதும் சாரமானதுமான மந்திரத்தை அதனுடைய கௌரவமும், தன்னுடைய பாரதந்தர்யமும் தோற்ற அதை ப்ரதானமாகவும் மூலாதாரமாக வும் கொண்டாடினன் என்றபடி. மலர்க்கண் மிசையொத்தினள் - தன்னுடைய ஞானக்கண் களால் அம்மந்திரத்தின் பெரும்பயனை அனுப வித்தான். தடந்தோள்வீங்கினள் - பெரியதோள்

களாகிய பகவத்பாகவதகைங்கரியசாதனங்களைப் பெருக்கினன். மெலிந்தனள் - பகவத்கைங்கரியத்தில் த்வரையுடையனய் அது எப்பொழுதுகிட்டுமோவென்னும் ஏக்கத்தாற் சோர்வுற்றன். குளிர்ந்தனள் - இந்த மந்திராநுசந்தானமே சகலவிதகைங்கரியமுமாகி அவன் திருவடி சேவைகிடைப்பிக்கச்செய்வதென்ற நிச்சயத்தால் ஸந்தோஷத்தையடைந்தான். வெதுப்போடேங்கினள்—

"ஒருகணத்திரண்டுகண்டேனெளிமணியாழியான்ற [ங்
திருமூலத்தடத்துவைத்தாள்வைத்தலுஞ்செல்வமின்பா
விரகமென்பதனின்வந்தவெங்கொடுந்தீயினல்வெந்
துருகியதுடனேயாறிவலித்தகுளிர்ப்புள்ளுற"

என்பதற்கிணங்க, ஈசனுக்கு உகப்பாகச் செய்யும் சத்கர்மங்களில் ஏதேனும் குறைவுபட்டு விடுமோவென்று மனக்கலக்கங்கொண்டு பரிதபித்தான். உயிர்த்தனள் - இன்னதென்றுதோன்றாது பெருமூச்செறிந்தான். இது இன்னதென

னாமே - இப்படியாகச் சேதனனுற்செய்யப்பட்ட பலசெய்கையை இன்னின்ன எண்ணங்கொண்டு இன்னகாரணத்தோடு இன்னின்னசெய்கைகள் செய்துகொண்டாடினன் என்றுசொல்லுவது எளிதாமோ என்பதாம்.

சுந்தரகாண்டம் உருக்காட்டுபடலம் செய்-67.

மோக்குமுலைவைத்துறமுயங்குமொளிர்நன்னீர்
நீக்கிநிறைகண்ணிணைததும்பநெடுநீள
நோக்குநுவலக்கருதுமொன்றுநுவல்கில்லாள்
மேக்குநிமிர்விம்மலள்விழுங்கலுறுகின்றாள்.

இ - ள். மோக்கும்—சேதனன் திருமந்திரத்தை அநுசந்தானம்செய்துகொண்டே அதனர்த்தத்தை யனுபவிப்பான். முலைவைத்துறமுயங்கும் - அதை த்வயத்தோடு நன்றாகப் பொருந்தும்படி சேர்ப்பான், அதாவது அத்வைதபாவமின்றி விசிஷ்டாத்வைதசித்தாந்தபரமாக அர்த்தத்தை நயிப்பிப்பனென்றபடி. கண்

ணி கேண த ளு ம் பவொளிர்நிறைநன்னீர்நீக்கி - "உயர்மழைக்கண்ணீராலாயிரங்கலசமாட்டி, யேங்கினளிருந்ததல்லாலியம்பலள்" என்றபடி தனக்குண்டான ஆற்றலாதத்தால் அக்ஞானம்மே விட்டுத் தன்னுற் சரியானகைங்கரியம்செய்து ஆதரிக்கமுடியுமோவென்று ஏக்கங்கொண்ட மனோசாஞ்சல்யத்தைநீக்கி; நெடுநீளநோக்கும் - திருஅஷ்டாக்ஷரத்தின் ஆழ்ந்துகிடக்கும் அர்த்த விசேஷங்களையெல்லாம் நெடுந்தூரம் ஆராய்வன். நுவலக்கருதும் - அதன்பெருமையைக் கண்டு பூரித்துப் பலமாக ஸ்தோத்திரம்செய்ய ஆசையை உடயவனுவான். ஒன்றும் நுவல்கில்லாள் - அடங்காத ஆனந்தத்தைப் பெற்றபடியால் யாதொன்றும் வாய்திறந்து சொல்லமுடியாது திகைத்துநிற்பான். மேக்குநிமிர்விம்மலள் - ஞாநாநந்தத்தாலுண்டான ஆத்மபுஷ்டியுடையனுய். விழுங்கலுறுகின்றுள் - அக்காரக்கனியான எம்பெருமானை விழுங்குவதுபோல அவகாஹிக்கத்தொடங்கினுன் என்பதாம்.

மேலேகண்டவிதமாகத் திருமந்திரத்தை அநுபவித்ததன்மேல், பின்வரும் இரண்டுசெய்யுள்களால் இந்தச் சேதனனுக்குண்டான தேஜஸ்ஸையும் அவன் பெற்ற பேருதவியையும் உணர்த்துகிறார்.

சுந்தரகாண்டம் உருக்காட்டுபடலம் செய்-68.

நீண்டவிழிநேரிழைதன் பின்னினிறமெல்லாம்
பூண்டதொளிர்பொன்னனையபொம்மனிறமெய்யே
ஆண்டகைதன்மோதிரமதித்தபொருளெல்லாம்
தீண்டளவில்வேதிகைசெய்தெய்வமணிகொல்லோ.

இ - ள். நீண்டவிழிநேரிழைதன் - திருமந்த்ரார்த்த ஜ்ஞானதைர்க்கியத்தையடைந்த சேதனனுக்கு. மின்னினிறமெல்லாம் - அப்பியாசதசையில் மின்போற்றோன்றிமறைந்துவந்த ஸ்வரூபஜ்ஞானமெல்லாம்; மெய்யே - பாவநாப்பிரகர்ஷத்தாலே பிரத்தியக்ஷஸமாநாகாரமாய்; ஒளிர் பொன்னனைய பொம்மனிறம் பூண்டது - தப்த

காஞ்சனம்போல் இடையீடின்றி விளங்கிற்று; அதாவது: சேதனனுடைய மனநிலை நிஷ்களங்கமாயிற்று; (எனெனில்) ஆண்டகைதன்மோதிரம் - திருஅஷ்டாக்ஷரமந்திரமானது. அடுத்தபொருளெல்லாம் - உபதேசம் பெற்ற எந்த ஜீவனையும். தீண்டளவில்வேதிகைசெய் - சிரவணமாத்திரத்தாலே ஸ்வரூபப்ரகாசத்தை யுண்டாக்குதலால். தெய்வமணிகொல்லோ - ஸ்பர்சனவேதியென்னுந் தெய்வத்தன்மைபொருந்தியமணிவிசேஷமோ? அல்லது ஞானானந்தசொரூபந்தானோ? மூலத்தில் ஐக்கியந்தானோ என்று வியக்கத்தக்கதாயுள்ளது என்பதாம்.

சுந்தரகாண்டம் உருக்காட்டுபடலம் செய்-69.

இருந்துபசியாலிடருழந்தவர்களெய்தும்
அருந்துமமுதாகியதறத்தவரையண்மும்
விருந்துமெனலாகியதுவீயுமுயிர்மீளும்
மருந்துமெனலாகியதுவாழிமணியாழி.

இ - ள். வாழி - பெருமைபொருந்திய நித்தியமானவாழ்வை அளிக்கத்தகுந்த; மணியாழி - திரு மூலமந்திரமானது ; பசியால் - இந்திரியங்களின் ஈடுபாட்டால்; இருந்திடருழந்தவர்கள் - மெய்ந்நெறிசெல்லா துய்ந்நெறியறிவின்றித் துக்கத்திலாழ்ந்து கஷ்டப்படுகிற ஒரு ஆத்மாவுக்கு; எய்தும் அருந்துமமுதாகியது - காலவிசேஷத்தில் இந்திரியானுபோகங்களினின்றும்விலகி உய்யுமநெறியடைவதற்கேற்பட்டதொரு ஒப்பற்ற உபாயம் கிடைத்தாற்போலாயிற்று; அறத்தவரையண்மும்-சன்மார்க்க மமைந்தவர்களைத்தேடிச்சேரும். விருந்துமெனலாகியது-விருந்துபோலவே சந்தோஷஹேதுவுமாயிற்று ; வீயு முயிர் மீளும்மருந்துமெனலாகியது - " இறுதியினுயிர் தந்தீயுமருந்தொத்தனையெந்தாய்" "எம்பிரானுமஞ்சொல்லி, உருக்கினனுணர்வைத்தந்தானுயிர்" என்பதற்கிணங்க, யாதொரு பயனுமற்றுத் திருவடிகளைச்சேராது வியர்த்தமாகப்போகும்நிலையில்

கின்ற ஒரு ஆத்மா உஜ்ஜீவிப்பதற்கு ஹேதுவான ஒருஅமிர்தசஞ்சீவிபோலும் ஆயிற்று என்பதாம்.

இவ்விருசெய்யுள்களாலும் திருமந்திரத்தின் ஸ்வபாவத்தையும், அதன்பெருமையையும், அதனால், சேதனனுக்குண்டான மேன்மையையும் சொல்லி, இனி அடுத்துவருஞ்செய்யுளால் அந்தச் சேதனன் கிருதக்ஞதையுடன் ஆசாரியனை ஸ்தோத்திரம்செய்ய ஆரம்பித்ததைச் சொல்லுகிறார்.

சுந்தரகாண்டம் உருக்காட்டுபடலம் செய்-70.

இத்தகையளாகியுயிரேமுறவிளங்கும்
முத்தநகையாள்விழியிஞைவிமுலேமுன்றில்
தத்தியுகமெண்குதலேதள்ளவுயிர்தந்தாய்
உத்தமவெனுவினையவாசகமுரைத்தாள்.

இ - ள். இத்தகையளாகி - மேற்சொன்ன படிக்குள்ள வைபவங்களைப்பெற்று; உயிரேமுற விளங்கும் முத்தநகையாள் - அத்தியானந்தத்தை

யடைந்தசேதனன்; விழியிஞலி - திருமந்திரத்தின் அர்த்தஜ்ஞானசாரம்; மூலமூன்றில் தத்தியுக - த்வயார்த்தத்தில் ததும்பிவழிய அநுசந்தித்து; மென்குதலைதள்ள - மிருதுபாஷியாய் ஸ்தோத்திர பூர்வகமாக ஆசாரியனைப்பார்த்து உயிர்தந்தாய் - உஜ்ஜீவிக்கும்பொருட்டு உபதேசம்செய்து அநுக்ரகித்த எம்பெருமானே! உத்தம-பரமபுருஷனே! என-என்றழைத்து ஸ்தோத்திரத்துக்கு ஆரம்பித்து; இனையவாசகமுரைத்தாள் - பின்வருமாறு சேதனன்சொல்லலுற்றான் என்பதாம்.

இச்செய்யுளுக்குப் பிராட்டி கணையாழியைக்கண்டு மகிழ்ந்து ஆனந்தபாஷ்பத்துடன் தன்னை உயிர்வைத்துக்கொள்ளும்படிக்கான ஹேதுவைச்செய்து மணியாழியைக்கொடுத்து உதவின அநுமனைப்பார்த்துத் தன்னுடைய நன்றியறிதலை வெளிப்படுத்தினளென்பது சாமான்னியக்கருத்தாயினும், வேதாந்தபரமாகத்திருமூல

மந்திர உபதேசாநந்தரம் ஞானப்பிரகாசமுள்ள சேதனன், ஆத்மானந்தப்பெருக்குடன் திருமந்திரசாரத்தை த்வயார்த்தத்திலூன்றி அநுசந்தித்து, உபதேசத்தால் தன்னை உஜ்ஜீவிக்கச் செய்த பரமாசாரியனுக்குத் தன் கிருதக்ஞதையை வெளிப்படுத்துகிறான் என்னுங் கருத்துத் தோன்றுமாறுகாண்க.

இனிவரும் இரண்டுசெய்யுள்களால் உத்தமமான தத்துவத்தையும், வேதாந்தக்குறிப்பையும் மங்களாசாசனமகிமையையும், விசேஷமாக எடுத்துச்சொல்லுகிறார்.

சுந்தரகாண்டம் உருக்காட்டுபடலம் செய்-71.

மும்மையாமுலகந்தந்தமுதல்வற்குமுதல்வன்றாதாய்ச்
செம்மையாலுயிர்தந்தாய்க்குச்செயலென்னொலெளியதுண்
அம்மையாயத்தனையவப்பனேயருளின்வாழ்வே [டே
இம்மையேமறுமைதானுநல்கினையிசையொடென்றாள்.

மும்மையாமுலகந்தந்த — பதினன்குலகத்தையும், கிருதகம், அகிருதகம், கிருதாகிருதகம்

என்று மூன்றுவகையாகப்பிரித்தபடி எல்லா உல கங்களையும் சிருஷ்டித்த; முதல்வற்கு—சிருஷ்டி யால் முதல்வனாகிய பிரமனுக்கு; முதல்வன்— "முதலாவார்மூவரேயம்மூவருள்ளும், முதலா வான்மூரிநீர்வண்ணன்" என்னும்

பூதனை சாக்ஷாத்பரமாத்ம னாதாய்—அக்ஞாநமடைந்தசேதன விக்கச்செய்யவேண்டியதற்காகப் கிருபைபெற்ற ஒரு ஆசாரிய யால்—நேரானவழியான சரணா முறைப்படி; உயிர்தந்தாய் ஈடேற்றி உய்யச்செய்த பரமஉப ... கிருபாளுவுமாகியவுனக்கு; செயல் என்னுலெளிய னுண்டே - நீசெய்த பேருதவிக்கு நான்செய்யக் கடவகைம்மாறு யாதொன்றுமில்லையே, அதா வது ஞானஉதயமானபின்பு 'நான்' 'எனது' என் பது இல்லையாதலின் தன்னுடையபாரதந்திரியந் துலங்க இவ்வாறு சேதனன்சொல்லலுற்றான் என்பதாம். அம்மையாய்—பிரியபரையாகிய

மாதாவைப்போலும் ; அத்தனாய—ஹிதபரனாகிய பிதாவைப்போலும் அநுக்கிரகஞ்செய்த; அப்பனே—பகவத்ஸ்வரூபனான ஆசார்யமூர்த்தியே. அருளின்வாழ்வே - க்ருபைக்கிருப்பிடமாயுள்ளவனே ! இம்மையேமறுமைதானும் இசையொடு நல்கினை— த்வயானுபவத்தைக்கொடுத்தருளினாய், அதன்மூலம் புகழையும் புண்ணியத்தையும் கட்டிக்கொண்டாய்; என்றாள்—என்று சேதனன் ஸ்தோத்திரம் செய்தான். (தவிரவும்)

சுந்தரகாண்டம் உருக்காட்டுபடலம் செய். 72.

பாழியபணைத்தோள்வீரதுணையிலேன்பரிவுதீர்த்த
வாழியர்வள்ளலேயான்மறுவிலாமனத்தேனென்னின்
ஊழியோர்பகலாயோதும்யாண்டெலாமுலகமேழு
மேழும்வீவுற்றஞான்றும்இன்றெனவிருத்தியென்றாள்.

பாழியபணைத்தோள்வீர-"மாணியாம்வேடந் தாங்கிமலரயற்கறிவுமாண்டோர், ஆணியாயுலகுக் கெல்லாமறம்பொருணிரப்புமண்ணல்" என்றபடி

பகவத்பாகவத கைங்கர்யசாதனமான பாருபல முடையவனே! ஆணையிலேலன்பரிவுதிர்த்த—யா தொரு ஆதாரமுமின்றிக் கடைத்தேயும்வழியற் றுக் கலங்கிக்கிடக்க அடியேனுடைய சாக்கத தையும் அஜ்ஞானத்தையும் நிவிர்த்தித்தது. வாழி யர்வள்ளலே— நித்தியமங்களமான வாழ்வை அன் புடனும் அகாவுடனும் அளித்த உதாரகுண முடை யவனே! யான்முமுவிலாமனத்தேனென்னின் — அக்ஞானாந்தகாரத்துள்மூழ்கி ஆத்மநாசமடையா நின்றனாேனறு உன்னுடையஸந்தர்சனத்தால் ஸவ ரூபயாதாத்மய ஜ்ஞானத்தையடைந் துஜ்ஜீவித்தே னையால். ஊழியோர் பகலாயோதுர்யாண்டெ லாமுலகமே ழேமெழுங்வீவுறறஞான்று மின்றென விருத்தியென்றாள்—நீ பலலாண்டுபல்லாண்டாய் நீடூழிகாலம நிலைபெற்று என்போன்ற இன்னும் அநேக சேதனர்களையும் உயிர்ப்பிக்கக்கடவை என்று சொல்லிச்சேதனன் அதிகவினயத்துடன் மங்களாசாசனம்செய்தான் என்றபடி.